தின்பாக்குவ சுவைப்பவுண்பவாய்
நன்பயன்செயு நால்வகையுண்டியு
மின்பமாம்வகை யாக்கைகடன்னினின்
றன்பவங்கியாயமுக் கின்றேனுநான். (௧௭)

நல்லமாந்தர் நல்லறிவுநன்கிலாப்
புல்லர்தங்கள் புல்லறிவும்போர்திகழ்
வில்லமைந்ததோள் வீரர்வீரயா
னல்லதில்லையென் றறியவேண்டுமே. (௧௮)

அசைவிலாமறைக்கறிவு நானதன்
வசையிலாதமெய்பொருளும் வாய்மைசே
ரிசையினுலெடுத்தோது வேனுநான்
விசையகேளினம் வேறுமொன்றையே. (௧௯)

மருவுகின்றதிவ் வுலகின்மாய்தலே
யுருவமாகமுன் புடையதொன்றுமே
யருவமொன்றினு லழிவதின்மையே
பொருவமின்றதோர் பொருளுமுண்டோ. (௨௦)

மொழிசெய்கின்ற திவ்விரண்டுமுற்றவே
விழியினுலுறநோக்கின் மெய்மையே
யழிவதாக்கையங் கழிவுபாடிலா
தொழிவதென்னெனி னுயிரொன்கின்றதே. (௨௧)

இவையிரண்டையுங்கடந்தியாதுமோர்
நவையுமின்றியேநாசமின்றியே
யெவையுமின்றியேயிழிவுமின்றியே
குவையினின்றதோர்குறியிலின்பமே. (௨௨)

இந்தவின்பமாமென்னையுள்ளவா
சிந்தையின்கணேதெளிதன்மேயினுர்
பந்தமொன்றிலார்பழையவிப்பொருட்
கந்தமாதிவேறறியவொண்ணுமோ. (௨௩)

வேதநாலுநின் றுரைசெய்தாலுமொன்
ரேதலாவதன் றுலகறிந்ததோ
காதலாலெனக்கினியதோழனீ
யாதலாலுனக்கறியவோதினேன். (௨௪)



வேறு.

கண்ணையோரிடத்துமின்றியதனிலேவைக்கிற்காதற்
பண்ணையோடாக்குகின்றவினையெலாம்பயக்குமென்ருன்
வெண்ணையோவிதுரனிட்டவிருந்தையோவேலைசூழ்ந்த
மண்ணையோவுண்டுமுன்னுள்வருபசிதீர்ந்தமாயோன். (௨௫)

பதினைந்தாவது
பிரபஞ்சவத்தியாயம் - முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - ௪௩௯.

---

பதினாறாவது

## தேவாசுர அத்தியாயம்.

மறந்திருந்தமனத்திருணீங்கிடத்
திறந்திறப்படச்செப்புதன்மேயினு
னறந்திறந்தெரிந்தாக்குதற்காகவே
பிறந்திறந்துழல்கின்றபேராளனே. (௧)

தெய்வவாசுரவொன்றித்திறத்தராய்
வையமாந்தரொல்லார்களும்வாழ்வதிங்
கையகேளவற்றின்றிறமென்றுதன்
செய்யவாய்திறந்திவ்வண்ணஞ்செப்பினுன். (௨)

வேறு.

அஞ்சுதலின்மையுமறிவையாக்கலு
நெஞ்சினையடக்கலுநிலைகெடாமையு
வெஞ்சினமின்மையுமெய்மைகூறலுந்
தஞ்செனவேள்வியுந்தவமுமாக்கலும். (௩)

மறைபயிறலுந்தனமதித்திராமையுங்
குறளைகடவிர்தலுங்கொல்கைமாற்றலும்
பிறர்பிழைபொறுத்தலும்பேரொழுக்கமு
மறன்வலிதானமோடருளையாக்கலும். (௪)

இருவகைத்தூய்மையுமிந்தியங்களை
யொருவழிப்படுத்தலுமுள்ளிட்டன்னவை
செருவருஞ்சிலையினுய்தெய்வத்தன்மையோர்
மருவியதொழிலெனமதிக்கவேண்டுமே. (௫)

வேறு.

தீமைசெய்யசுரரானோர்செய்கையைத்தெரிக்கிலொன்றை
யாம்வகையெனமற்றாகாதனவெனவறிதலில்லார்
தூய்மையுந்தூயவாயவொழுக்கமுந்தொடக்குவிட்டார்
வாய்மையொன்றானுமில்லார்மயக்கமேமருவாநின்றார். (௬)

வேறு.

எண்ணியவுலகமுமுலகிற்கீசனும்
புண்ணியபாவமும்பொய்யென்றேகொள்வர்
பெண்ணினோடாண்புணர்கின்றபெற்றியா
னண்ணியயாவையுமென்றுநாட்டுவார். (௭)

வேறு.

விரும்பலராகியொழுக்கங்கடுறந்தார்மெய்மையுஞ்செம்மையும்
விட்டா, ரிரும்பயனானவறிவுமாய்ந்துள்ளாரிடம்படாமனத்தினோ
டிசைந்தார், பெரும்பழியானதொழில்களேபுரிவார்பிழைப்புவாய்
ப்பொன்றறியாதா, ரரும்பகையாயிவ்வுலகினையெல்லாமழிப்பதன்
பொருட்டவதரித்தார். (௮)

வேறு.

நிறைவிலாக்காமபோகந் தன்னையேநிறைக்கவேண்டி
மறைவிலாமானத்தோடுமதங்களைமருவிநின்றுங்
குறைவிலாமயக்கத்தோடுகோபத்தையடைந்துநின்றும்
பொறையிலாவிரதம்பூண்டும்பொய்த்தவம்புரியாநிற்பார். (௯)

இறந்துபோமளவுமெய்தாப்பொருளையேயெண்ணாநிற்பார்
மறந்துமோர்பொருள்வேறில்லைவருபயனன்றியென்பார்
சிறந்தபோகங்கட்காகத்தீமையாற்பொருளைச்சேர்ப்பார்
பிறந்துபேராசையாயபாசத்தாற்பிணிக்கப்பட்டார். (௧௦)

இப்பொருளடைந்தோம்வேறுபொருளினையடைவோமென்று
மிப்பகைசெகுத்தோம்வேறுபகையினைச்செகுப்போமென்றுந்
துய்ப்பவொம்மிற்றுய்க்கவல்லவரில்லையென்று
மொப்பவொம்மின்மிக்காருளர்கொலென்றுணராநிற்பார். (௧௧)

இனம்வலியின்பம்பெற்றேமெம்மின்மிக்கார்களில்லைத்
தனமிகவுடையோமென்றுந்தம்மையேவியவாநிற்பார்
மனமகிழ்யாகஞ்செய்வோமழையெனக்கொடுப்போமென்றுந்
தினமவைதோறுஞ்சிந்திப்பதுவலாற்செய்வதில்லார். (௧௨)



வேறு.

தொடக்கறவில்லாநினைவெனப்பட்டசூழலைப்பற்றியேசுழல்வா
ரடக்கரிதாயமயக்கமென்கின்றவலையுளேயகப்பட்டுநின்றா [திக்
ருடற்குடில்வாழ்வாம்புன்னுனைப்பனிநீருவர்ந்திடினுயிர்நடுக்கெய்
கடப்பரிதாயநரகமென்கின்றகடல்களில்வீழவேகடவார். (௧௩)

வியந்துதங்களையேமேலாய்ப்பார்த்துமெய்மாந்தர்தம்மை
நயந்துகொண்டாடலில்லார்நல்லவைசெய்தாரொன்று
பயன்றொடர்ந்துரைத்தற்காகப்பாடியபழையநூல்க
ளியம்பியபடிசெய்யாதேயாகங்களியற்றாநிற்பார். (௧௪)

வேறு.

மன்னியகளிப்பொடுவலியுங்காமமுந்
துன்னியானெனும்பெருமயக்கஞ்சூழ்ந்துளா
ரொன்னியல்பினைத்தமில்யாவர்மாட்டினு
மன்னியமெனக்கொடுபொறாமையாக்குவார். (௧௫)

வேறு.

மற்றவர்தம்மையிந்தமாநுடரானோரியார்க்குங்
கொற்றவகீழானோரைக்கொடுமையாலரவொப்பாரை
யற்றமில்விடும்பைசேருமாசுரயோனியாய
புற்றவைதோறுமியானேபுகப்புகவிழுத்துகின்றேன். (௧௬)

வேறு

இவ்வகையாசுர யோனியடைந்தோர்
மெய்வகையாமறி வின்மையினாலே
நைவர்கடை நரகக்கதிதோறு
முய்வகையின்றி யுழன்றுதிரிந்தே. (௧௭)

ஒருவனசிக்க வியற்றுவதென்று
மருநரகத்தி னடைப்பதுதானும்
வரும்வழிமூன்றுள மற்றவைதம்மை
யொருமுறைகூறி யுணர்த்திடுவன்கேள். (௧௮)

காதலினாகிய காமமுலோபமுங்
கோதுறவேசுடு தீநிகர்கோபமு
மாதலினாலிவை மூன்றுமகன்றார்
வேதனைதீர்பெரு வீடுவிழைந்தார். (௧௯)

கூறின நூல்வழி சேர்குறிபேணா
தேறினவாறுசெய் வாரிகலோகம்

வேறியலார்பர லோகம்விளைக்கும்
பேறினவானவை பேறுபெறுரால். (௨௦)

வேறு.

ஆதலிலடாத வறிகைக்குவழியான
வேதமுதனூலவை விதித்தநெறியாலே
யேதநினையாதுன் வினையேயிசைகவென்றான்
பூதமுதலானவை பொறுத்தருளுகின்றான். (௨௧)

பதினாறாவது
தேவாசுரவத்தியாயம் - முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௨௱௭.

---

பதினேழாவது

## குணவிகார அத்தியாயம்.

உண்டுமீள வொழித்துலகியாவையுங்
கண்டுகாப்பவன் கட்டுரைத்திட்டதே
கொண்டுபார்த்தனக் கொண்டல்வண்ணன்றனைத்
தொண்டுகூறிப் பணிந்திதுசொல்லுவான். (௧)

வேதமேமுதனூல் விதியன்றியே
காதலாலுலகோர் செயுங்காரிய
மேதமாங்குண மூன்றினுமியாதென
வோதமாக்கடல் வண்ணனுமோதுவான். (௨)

வேறு.

யாவர்களாசைப் பாடுமியம்பிடிலியம்பப்பட்ட
மூவகைக்குணமுமாகி யல்லதுமுடிந்துமில்லா
மேவருமவற்றினுய வேறுபாடதனையெல்லாங்
காவலதெரியக்கூறக் கேளெனக்கழறலுற்றான். (௩)

வேறு.

சாத்துவிதர்தேவரையே சரண்புகுவர்தாமதர்கள்
காத்தல்புரிவனபேயும் பூதமுமாய்க்கடைப்பிடிப்ப
ரோத்தரியகுணமிவற்றிலி ராசதமாங்குணமுடையோ
ராத்தனெனவியக்கரையு மரக்கரையுமடைகுவரால். (௪)



வேறு.

அடங்கியபொறியினு மறிவுமன்றியே
யிடம்படுநூல்களி னியல்புமின்றியே
யுடம்பையுமுயிரையு மாய்க்குமாதவந்
தொடங்கினரசுரயோ னியினிற்றோன்றினார். (௫)

வேறு.

உண்பனயாகமாரு முறுதவந்தானமென்ன
வொண்படவுரைத்தநான்கு மோரொன்றுமூன்றாய்நின்ற
பண்படுகுணங்களாலே கேளெனப்பற்றுவீடு
நண்பொடுபகையுமில்லான் முறையினனவிற்றலுற்றான். (௬)

சத்துவகுணத்தோருண்டி யுரைத்திடிலழகுசார்ந்து
தித்தித்தசுவையவாகி நெய்த்துச்சிக்கெனவுசேர்ந்து
வத்தித்துவலிநோயின்மை யறிவுநல்லாயுவின்பம்
வத்திக்கச்செய்தவிந்த வுணவுகண்மடங்கலன்னாய். (௭)

இப்படியன்றிவேறாயிரா சதருணவுகேட்கிற்
கைப்பனபுளிப்புவர்ப்புக் கூர்ப்பனகடியவெய்து
நெய்ப்பயினெருப்புப்போலச் சுடுவனவிவற்றினாலே
மெய்ப்படுநோயுநெஞ்சத் திடும்பையும்விளைவவேலோய். (௮)

ஆசினையடைந்தநெஞ்சிற் றாமதருணவுகேட்கி
லூசினபழஞ்சோறெச்சி லும்பர்பூசனைக்காகாமை
யேசினவெந்திலாத வினையனவிவற்றினாலே (௯)
காய்சினமுதலாயுள்ள துயரெலாம்விளைவகண்டாய்.

செயத்தகுவனவென்றல்லாற் சேர்பயன்சிந்தியாதே
தயக்கநூன்முறைசெய்யாகஞ் சாத்திகஞ்சாரியாகம்
பயத்தையேவேண்டியாதல் பலர்புகழ்வேண்டியாத (௧௦)
லியற்றுறும்யாகமெல்லா மிராசதயாகமாமே.

நூற்படுநெறியுமின்றி நுனித்தவவ்வினையின்மேலோர்
தாற்பரியமுமதின்றித் தக்கமந்திரமுமின்றி
யேற்பவர்க்கீதலின்றி யியற்றுறுகின்றயாகந் (௧௧)
தார்ப்பொலிகின்றமார்பா தாமதயாகமாமே.

வேறு.

தீக்குலாம்வேலினாய்த வத்தின்செய்கைதான்
வாக்கினாற்பேசுதன் மனத்தினுக்குத

லாக்கையாலியற்றுத லாயிருப்பது
நோக்கிநாமிவற்றினை நுனித்துக்கூறுவாம். (கஉ)

வேறு.

தீர்த்தயார்க்குஞ் செவிக்கினிதாயின
வார்த்தைமாமருந் தேயெனலாவது
வோர்த்துமெய்மொழி கூறுதலோதுதல்
வார்த்தையாற்பண்ணு மாதவமாவதே. (கங)

தெளிவினெஞ்சைத் தெளியப்பிடித்தலுங்
களிசெயைம்புலனைக் களிமாற்றலுங்
குளிர்வினெஞ்சினு ணர்வுகொடாமையு
மெளிதின்மானத மாதவமென்பதே. (கச)

தலைமையந்தணர் தேவர்குரவர்பான்
மலைதலின்றிவழி படுவாழ்க்கையுங்
கொலைதுறத்தலுங் காமங்குறைத்தலுந்
தலைவகாயத் தவமெனப்பட்டதே. (கரு)

வேறு.

தீத்தவமும்வடிவேலோய் செப்பியவிம்மூன்றுலுஞ்
சாத்துலகமகிழ்வெய்தச் செய்கின்றவருந்தவத்தி
னூர்த்துவரும்பயன்வேண்டா தாகின்றவருந்தவந்தான்
சாத்துவிததவமென்று சாற்றுவதுதக்கோரே. (கசு)

வசையிறவமுடையரோன மாநுடர்கொண்டாடுகைக்கு
நசையினெடுபொருள்பெறவுஞ் செய்கின்றநற்றவத்தை
விசயவுனக்குரைசெய்தேன் மிகப்பெரியோர்செய்திடினு
மிசையவறிமற்றிதனை யிராசதமாந்தவமென்றே. (கஎ)

பேதைமையைமிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்கும்பிறவுயிர்க்கு
மேதமுறுபெருந்துயருங் கேடுமேயியற்றுவதா
யாதவனும்பனியுமுழன் றூற்றுகின்றவருந்தவந்தான்
றுதலருநெடுமுடியாய் தாமதமாந்தவமாமே. (கஅ)

வேறு.

முன்செய்காரியப்பொருட்டு மின்றியேமுடித்திதனாற்
பின்பொருநற்பொருள்விளையு மென்பதுவும்பேணாதே
நன்குடையகாலத்தே நல்லிடத்தேநல்லவர்க்குத்
தன்பொருளைக்கொடுக்குமது சாத்துவிததானமே. (ககூ)



கொண்டுசெயத்தகுங்கருமமெனுங்குறிப்பொன்றின்றியே
பண்டுசிலர்செய்ததற்காய்ப்பரிவோடுபண்ணினவு
மூண்டிதனுன்மேல்விளைவென்றுணர்வோடிச்செய்வனவு
மெண்டிசையுநிறைபுகழாயிராசதமாந்தானமே. (உ0)

வாயாதவொருபொருளைவழங்காதகாலத்தே
யேயாதநிலத்திடையேயிழிந்தகுலத்தவர்களுக்கே
யாயாதவறிவினெடுமப்பிரியத்தொடுங்கொடுத்தல்
சாயாதபெருந்திறலோய்த்தாமதமாந்தானமே. (உக)

வேறு.

ஒப்பரிதாயவுண்டியோடியாகமுறுதவந்தானமென்றுரைத்த
வப்படியெல்லாமறிவகையுனக்குமுரைத்தனனடையமற்றையா
மெய்ப்படியாமற்றிவற்றினைச்செய்துவீடுபெற்றுயர்நெறியாவ [ணீ.
தெப்படியென்னிலதனையுமுனக்குத்தெரிவகையுணர்த்துவன்கே

வேறு.

ஓமென்கின்றதனியெழுத்துமுரைத்தற்கரியதற்பதமுந்
தாமங்கமழ்தார்மார்பனேசத்தென்கின்றதனிப்பதமு
மாமென்கின்றவிவைமூன்றுமறிவின்பெயர்மற்றிவற்றாலே
யாமுன்புணருமறைமறையோர்யாகந்தோன்றிற்றெனவறிவாய். ()

ஓமென்றுரைத்தேவினைசெய்வார்வீடுற்றவர்வீடுறுமவர்க
டாமுன்புரைத்ததற்பதத்தையுரைத்தேசெய்வர்சத்தென்றே
யாமென்கின்றவிவைமூன்றும்வினைமற்றினமாயினவெல்லாங்
காமபலத்தின்மேலின்றிச்செய்வாரறிஞர்கதிர்வேலோய். (உச)

வேறு.

காதலாலிந்தப்பதங்கண்மூன்றினையுங்கற்றுணர்ந்தவர்கடங்க
ருத்தா, லோதலாம்வகையாலுரைத்தலாற்றவமுந்தானமுமுதலி
யவொழியா, ராதலாலிந்தப்பதங்களையுரைத்தேவினைசெயத்தகுவ
தென்றுரைத்தான், நீதிலாவுலகந்தன்னுளேயுதிப்பத்தேவகிதிரு
வயிற்றுதித்தோன். (உரு)

பதினேழாவது

குணவிகாரவத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சஅஉ.

---

பதினெட்டாவது

## சஞ்சேப அத்தியாயம்.

ஏகமேகருதுவாரிதயமேவிளைவதோர்
போகமேயுலகிலோர்பொருவிலாவொருவனே
நாகமேயமளியாய்நளினமேலமர்வதோர்
மேகமேபணியெனாவிசயன்மேல்வினவுவான். (௧)

வேறு.

சந்நியாசமாவதுந்தகுந்தியாகமாவது
மென்னியாயமாகவெம்பிரானியம்புகென்னவே
வன்னிவாயுவானமாகிமண்ணுநீருமாகியோன்
றன்னியாயப்பொருட்டொகைத்திறஞ்சொலத்தொடங்கினான் ()

காமமென்றிடும்பலன்செய்கன்மமானயாவையுந்
தாமடங்கவேயிகத்தல்சந்நியாசமாவதிங்
கேமமின்றியெவ்வினைப்பயன்களானயாவையுந்
தீமையென்றறத்துடைத்திருத்தறியாகமாவதே. (௩)

தீங்கியற்றுகின்றதீவினைத்திறங்கள்போலவே
யீங்கியற்றுகின்றநல்வினைத்திறங்களியாவையு
மாங்கியற்றலின்றிவிட்டிருத்தலேயருத்தமாச்
சாங்கியத்தையோதிடுந்தவத்துளோருரைப்பரால். (௪)

ஞானகாரணங்களாதலாலியாகநற்றவந்
தானமோடிகத்தலைத்தகாமைகூறுவாருள
ரானகாரணத்தினாலறிந்தடங்கினாற்கலா
லீனமாமிவற்றைவிட்டிகத்தலென்றிருத்தலே. (௫)

வேறு.

தியாகமூன்றுவகைப்படுஞ்செப்பக்கே
ளியாகமுந்தவந்தானமுமென்றிவை
மயாலறுக்குமனத்தினையாதலா
லயாவுரைக்கில்விடுகையடாததால். (௬)

என்னசெய்வதெனிலிவ்வினைகளாற்
பின்னையெய்தும்பெரும்பயனாவது
தன்னைவிட்டுச்செயத்தகுமென்பது
முன்னையோர்க்குமெனக்குமுடிவரோ. (௭)



நித்தமாயவினையினெறியினை
மத்தர்போலவொருவன்மயக்கினாற்
பித்தனாய்விடுகின்றவப்பெற்றியைச்
சித்ததாமதத்தியாகமென்கின்றதே. (௮)

மெய்வருத்தமுண்டென்றுவிடுவது
மையமின்றியிராசதத்தியாகமாங்
கைவரும்பலமாசைகைமாறவே
செய்வசெய்வதுசத்துவத்தியாகமே. (௯)

யாதின்மாட்டினுமையமொன்றின்றியே
தீதின்ஞானியுந்தியாகியுமானவன்
கோதிலின்பமுந்துன்பமுங்கூர்வினை
மீதுவேண்டல்வேண்டாமையும்வீடுமால். (௧௦)

யாக்கையோடுமிசையிலிருவினை
நீக்கலாவனவல்லநிலத்திடை
வீக்கமாயவினைப்பயன்வீடினார்
போக்கலாவினையாவையும்போக்கினார். (௧௧)

வேறு.

இன்னாதனவுமினியனவுமிரண்டுங்கூடியிசைந்தவுமாய்
மூன்றாநின்றவினைமூன்றுமவற்றால்வந்தமுடிபொருளும்
பொன்னானதுவுந்தொழிலும்போலிருக்குமிந்தப்பொய்மெய்யை
யுன்னாதவர்க்கேயுள்ளதிவையுணர்ந்தோர்க்குளவாயுதியாவால். ()

வேறு.

ஓங்கியவுலகினிலுயர்ந்தநன்மையுந்
தீங்கினவாம்வினையாவுஞ்செய்தற்குச்
சாங்கியநூலிலேயுரைத்தசாதன
மீங்கிவையைந்தையுமெடுத்துக்கூறுவாம். (௧௩)

இருப்பிடமாமுடம்பியற்றுமாருயிர்
கருத்தினைமுதலியகரணங்காற்றினால்
விருப்பொடுவருந்தொழிலிவற்றின்மெய்ப்பா
னருத்தமாமொழியெனவாகவைந்தரோ. (௧௪)

வாக்கினாலாதன்மெய்மனத்தினாதறம்
யாக்கையாலாதலிவ்வுலகிலியாவரும்

வீக்குவார்சிலையினாய்வினையிரண்டிலொன்
றாக்குநாளிங்கிவையைந்தும்வேண்டுமால். (௧௫)

இவ்வகையேவரும் வினையிரண்டையு
மெய்வகையாகயா னன்றிவேறிலைச்
செய்வகையானெனச் சிந்தைமேயினா
னுய்வகைவேறிலா னுணர்வுமாய்ந்துளான். (௧௬)

வேறு.

யாவனொருவன்றன்னுடம்பை யானென்றிருக்குமியல்பொழிந்தா
னியாவனொருவன்றன்கரணமி யாதொன்றோடும்விழைந்திரா
னவவவனிவ்வுலகத்தை யடையக்கொன்றானாயினுமோர்
பாவமில்லையவன்கொன்ற பழியுமில்லைபார்மன்னா. (௧௭)

அறிவுமறியப்படும்பொருளு மறிவானொருவன்றானுமாய்
நெறியில்வினைகள்விதிக்கின்ற விதியினிலைமைநிற்பதுதான்
செறியுந்தொழிலுஞ்செய்வானுஞ் செய்தற்குரியகரணமுமாய்க்
குறியில்வினைகண்முடிவிருப்ப தின்னஞ்சிலவுங்கூறக்கேள். (௧௮)

ஆன்றவறிவுங்கருமமுமக் கருமங்களையாக்கிடுவானு, மூன்ற
வுணரும்புத்தியொடுதிருத்தி யெனவென்றுரைத்தனவுந், தோன்
றவினையுமின்பமுமுன்சொன்ன குணத்தின்றொடர்பாலே, மூன்
றுவகையாமோரொவ்வொன் றவற்றின்றிறநான்மொழியக்கேள்.

நன்றாய்ஞானத்திரளாகி நானாவிதமாய்விரிந்தெங்கும்
பொன்றாநின்றபூதங்கடோறும் பொன்றாப்பொருளாகி
யொன்றாய்நிற்பதொன்றதனை யப்படியேயுணருமுணர்வதனை
யன்றாமென்னார்சாத்துவித ஞானமெனவேயமைப்பரால். (௨௦)

ஊனப்படுமிவ்வுடறோறுமுள்ள பொருளையுணராதே
யீனப்படக்காண்கின்றதிரா சதமாஞானமதுவன்றி
ஞானத்திரளாய்நின்றதையோ ருடம்பினிடையுநாட்டிடையோர்
தானத்திடையுமடங்கக்காண் பதுதாமதமாஞானமே. (௨௧)

வேறு.

வீதலும்பற்றுமேலோர் வினைப்பயன்வேண்டல்வேண்டாக்
காதலொன்றின்றிச்செய்யுங் கருமஞ்சாத்துவிதகன்ம
மாய்தரும்பலத்தினோடு மகங்காரமத்தினோடு
மேய்தருங்கருமமெல்லா மிராசதகருமமாமே. (௨௨)



கொலைபெரும்பற்றுமேலோர் கூறியநீதியோடுங்
கலைதெரிந்துணர்ந்துமெய்மை கடைப்பிடியாமையார்க்கு
மலைவருங்கேடுசூழ்தலனைத் தினுமொன்றலோடுந்
தலைவரச்செய்வதெல்லாந் தாமதகருமமாமே. (௨௩)

பற்றுமாங்காரந்தானும் பழுதறத்துறந்தியாவு
முற்றெழுமுயற்சியோடு நிலைமையினோடுமொன்றி
யெற்றுமோரிழவுபெற்றி துன்பமீதின்பமென்று
சற்றுமோர்சலிப்பிலாததலைவன் சாத்துவிதனென்பான். (௨௪)

வேறு.

வினைப்பயன்றனைவேண்டலும்வேட்கையு
மெனைத்துமியார்க்குமிடாமையுந்தூய்மையி
னினைப்புநீடலுநெஞ்சுமகிழ்தலு
மனைப்பவாழ்வரிராசதமாந்தரே. (௨௫)

மனமொருக்கலும்வான்கலைநூல்களைத்
தனமெனக்கொடுகற்கலுந்தக்கவ
ரினமகிழ்த்தலுமின்றியுண்டாகிய
சினம்விடுக்கலார்தாமதஞ்சேர்ந்துளார். (௨௬)

ஈனமற்றதுறவறமில்லறம்
ஞானம்பற்றொடுநல்வினைதீவினை
யானவஞ்சுவவஞ்சத்தகாதெனத்
தானறிந்ததுசத்துவபுத்தியே. (௨௭)

தருமம்பாவந்தனக்குச்செயத்தகுங்
கருமஞ்செய்யத்தகாதகருமங்க
ளருமையாலறியாதவறிவதே
யிருமையாயவிராசதபுத்தியே. (௨௮)

பாவமாகத்தருமத்தைப்பார்க்கையு
மாவதாமென்றடாததுநோக்கலுந்
தீமைசெய்கின்றசிந்தனைதீங்கிலே
போவதாவதுதாமதபுத்தியே. (௨௯)

மனஞ்செயுந்தொழின்மன்னுயிரின்றொழி
லினஞ்செயிந்தியஞ்செய்தொழிலென்றிவை
கனஞ்செய்தேறிலுங்கண்டுபொறுத்தலுஞ்
சினஞ்செயாமையுஞ்சாத்திகதிர்த்தியே. (௩௦)

பண்ணிக்காமந்தரும்பயன்கைக்கொள்வா
னெண்ணித்தாங்குந்திருத்தியிராசதங்
கண்ணிற்சோகங்களிப்புறக்கம்பய
நண்ணித்தாங்குந்தமப்பொறைநாளுமே. (௩௧)

துன்பமாய்விடம்போன்றுதொடக்கத்தி
லின்பமாகிவிளைவிடம்யாவர்க்கு
மன்பவாரமுதேயெனலாவதா
மென்பசாத்துவிகந்தருமின்பமே. (௩௨)

பொருத்தமாய்ப்புலனோடுபொறியிலே
யருத்தமாயெழுந்தாரமுதென்னலாய்
விருத்தமாய்விளைந்தால்விடமாகியே
யிருத்தலாகுமிராசதவின்பமே. (௩௩)

தொடருறக்கமயக்கொடுசோம்புமேற்
படவுதித்தவைபண்ணும்பொழுதினுங்
கடன்விளைந்துமுடிந்தகாலத்தினு
மிடர்விளைப்பதுதாமதவின்பமே. (௩௪)

வேறு.

இந்தவியற்கையினாலிக்குணங்களைவிட்டவரில்லை
யந்தணர்க்குமரசர்க்கும்வணிகர்க்குஞ்சூத்திரர்க்குந்
தந்தமியற்கையவாயகுணமூன்றின்றன்மையினில்
வந்தவினைத்திறமவற்றையுரைப்பன்கேண்முடிமன்னா. (௩௫)

வேறு.

கறைசெயைம்புலன்களைக்கரணநான்குடன்
முறைதுறையடக்கலுந்தவமுந்தூய்மையும்
பொறையொடுகல்வியும்பொருந்துஞானமு
மறையவர்தொழிலெனவகுக்கப்பட்டதே. (௩௬)

தலைமையுங்கொடையொடுதறுகணாண்மையு
நிலைமையுங்கீழ்ப்படாநெஞ்சினீட்டமுங்
கொலைபயில்போர்களிற்புறங்கொடாமையுஞ்
சிலைமலிதோளினுயரசர்செய்கையே. (௩௭)

உழுதொழில்பசுக்களை யோம்பல்வாணிபம்
வழுவறச்செய்தொழில் வணிகர்வாழ்க்கையாம்
பழுதறவிவர்களைப் பாதுகாத்தலே
விழுமியதொழில்கள் வேளாளர்க்கென்பவே. (௩௮)



வேறு.

தீராவகைதன் செயலேசெயவே
நாராயணனாமுதனாயகனுக்
காராதனையா மதனாலவனே
வாராவழியாம் வரமேதருமால். (௩௯)

வேறு.

அல்லாவினைதா னழகாய்வரினுஞ்
செல்லார்பெரியோ ரவைசெய்வதனிற்
றொல்லார்குலமே தொடருந்தொழிலே
பொல்லாவெனினுஞ் செயலேபொருளே. (௪௦)

வேறு.

கனையெரிபுகையோடன்றிக் காணமுன்படாமைபோல
வினைகளுங்குற்றந்தன்னை விட்டிராதாதலாலே
யனையவென்றிகழ்தலாகா வடுத்தகாரியங்கடம்மை
நினைவருந்தருமமென்று செய்கையேநீதியெல்லாம். (௪௧)

வேறு.

வெல்லப்பட்டமனத்தினனாய் வேறொன்றினையும்வேண்டாதே
யல்லற்படுக்குமுடற்பற்றுமறவே யறுத்தான்வினையடையச்
செல்லச்செல்லவறுத்தானா மதனாற்சித்தமுடிவாகச்
சொல்லப்பட்டகரணங்க ணான்குந்தூய்தாய்விடுமன்றே. (௪௨)

சொன்னகரணமவைநான்குந் தூய்தாய்விடவத்தூய்மையினா
லுன்னவரியபெரும்பொறையை யுடையனாகுமப்பொறையா
லின்னல்செய்யும்பொறியைந்து மிராகத்துவேடமெனுமிரண்டு
மன்னதன்னைநலியாமைமாற்று மவற்றைமாற்றினால். (௪௩)

காடுமலையுமலைமுழைஞ்சுங் கடுமாமுதலைநலிவில்லா
வோடும்புனலாறுள்ளிட்டவிடமே யுறையுளாய்க்கொண்டு
தேடும்பொருளொன்றின்றியே சிறிதேயுண்டுசென்றெங்கு
மாடுமனம்வாய்மொழியாக் கையடங்கப்பெறுமாலவனையா. (௪௪)

சொன்னவிவைபோயடங்கிடவே தோன்றுங்களிப்புங்காமமுமுன்
பென்னதியானென்கின்றதுவு மெரிபோல்வெகுளியொடுவலியு
முனனறவிர்ந்துசாந்திபெறுஞ் சாந்திபெறவேயோரிடத்தும்
பின்னமடையாதொன்றுகின்ற பொருளின்பேருருவாம். (௪௫)

அந்தவுருவானவன் பின்னையாதேவரினுமழிவுறா
னிந்தவுலகத்துயிர்க்கெல்லா மொத்தேயிருக்குமீங்கிவனும்

பந்தமறவிட்டெனையறியும் பத்திபெறுமப்பத்தியினாற்
சிந்தையிடையேயெனைத்தெளியு மதனாலெனையேசேருமால். (௪௬)
என்னைப்பற்றிக்கொடுநின்றே யெல்லாவினையுமியற்றினாற்
பின்னைப்பிறவாப்பெரும்பத மென்னருளினாலேபெறுங்கண்டாய்
நின்னைத்தொடரும்வினையெல்லா மென்னைநினைந்தேசெயில்வினைக
டன்னைக்கடத்தற்கருந் துன்பமெல்லாங்கடக்கத்தகுதியால். (௪௭)

வேறு.

ஒன்றியமனத்தினாலே யானுரைக்கின்றவுண்மை
நன்றிதென்றுணராவாயி னாசமேயடைதிமற்றீ
தன்றியுமரசர்க்கெல்லா மடுத்தகாரியமாயுள்ள
வென்றியையடையாயேனும் வேறினிவிளைவகேளாய். (௪௮)

வேறு.

விரைசெய்தார்மன்ன வேண்டலையாயினுங்
கரைசெய்மாயையுங் காலுறவாழ்த்திடு
மரசர்தங்குணமாகிய வாண்மையே
புரைசெய்வாளமர்க்கே புகுவிக்குமால். (௪௯)
பொறிகளுண்ணின்றவற்றின் புணர்ப்பெலா
மறியவாட்டினன் போலாக்கைகடொறு
மறைவினின்றுதன் மாயையினால்வினைக்
குறிகள்செய்விப்ப னீசனென்றேகொள்வாய். (௫௦)

வேறு.

வேறப்பாவொருவர்க்கு விளம்புதன்
மாறப்பட்டபொருளின் வகையெலாங்
கூறப்பட்டதுனக்கிக் குறிகளை
யேறப்பார்த்துனக் கேறியவாசெய்வாய். (௫௧)

வேறு.

நீதகலாதெனவுளவோ விவன்வேண்டிலெனத்தேறி
லோதலினானினைத்தலினா லெனைப்போக்கியொன்றறியா
யாதலினாலியாவர்களுமறி யாதவொருபொருளைக்
காதலினாலுனக்கின்ன முரைக்கின்றேன்கடைப்பிடிநீ. (௫௨)
என்னையேநினைந்தெழவுன் மனத்தினையென்னிடையேவை
யென்னையேநினைந்திருநீ மற்றெனக்கேபூசனைசெ
யென்னையேகுருவாக்கொள்ளெப்போதுமிதுசெய்யி
லென்னையேவந்தடைதியிது மெய்யேயிதுமெய்யே. (௫௩)



இருவேறுவகையாய வெவ்வேறுவினைகளையு
மருவேனென்றறவிட்டு மாயையினான்மறைப்பரிய
வொருவனையேபற்றுதியப் பற்றினாலுனைப்பிறவிக்
கருவேலைகடந்தேறக் கைதருவேன்கதிர்வேலோய். (௫௪)
மற்றுனக்குச்சொல்லியவிம் மறைப்பொருண்மாதவமிலர்க்குங்
குற்றமறுத்தறிவருளுங் குருவழிபாடிலாதவர்க்குஞ்
செற்றமனச்சழக்கர்க்குமெனை நினையாத்திறத்தவர்க்கு
மற்றமறத்தெரிந்துரைக்கை யடாதென்றேயறிகண்டாய். (௫௫)
எல்லாப்பொருட்கும்பரமாமிப்பொருளை யென்னன்பர்க்கிசையச்
சொல்லாற்றெரிவிப்பவரன் புத்துன்னியென்பாலெனையடைவர்
நல்லார்களின்மற்றெனக்கினிய நன்மைசெய்கின்றாருமவ
ரல்லாதவரிப்பொழுதுமிலை மேலுமவர்களுளராகார். (௫௬)
ஏயவிருவோம்பேசியவிவ் வறநூலினையேயெடுத்துரைப்பா
னாயஞானயாகத்தா லெனையேயாராதிக்கின்றான்
மேயபொருண்மைதனைவிட்டு விருப்பாலிதனைக்கேட்பானுந்
தீயவினைகளறவிட்டுத் தேவருலகஞ்சேருமால். (௫௭)

வேறு.

என்னதுமொழியினாலியா னியம்பியஞானத்தாலே
மன்னவவுனக்குவந்த மயக்கெலாங்கெட்டதோயான்
சொன்னவிப்பொருள்களெல்லாந் துணிந்தனைகொல்லோவென்று
நன்னகைகூரநின்று நாயகனருளிச்செய்தான். (௫௮)

வேறு.

மன்னவவென்மாய மதுசூதமறைநாவின்
முன்னவமொழிந்த திருவாய்மொழிகளாலே
யென்னகுறையுண்டினி யெனக்கெனவியம்பித்
தன்னகமகிழ்ந்திவை தனஞ்சயனுரைப்பான். (௫௯)
பையரவிலேயினிது பள்ளியமர்வோனே
வையமுமிவ்வையமதின் மன்னுயிர்களியாவுஞ்
செய்யும்வகையுற்றது சிதைத்தலதுதானு
மெய்தெரியினீமுன் விளையாடும்வகையன்றோ. (௬௦)
அணித்தகையசோதி யமலாவுன்னருளாலே
கணித்தலரிதாய பிறவிக்கடல்கடந்தேன்
பிணித்தபெருமாயை மயல்கெட்டதுபிரானே
பணித்தபணியல்லது செயத்தகுவதுண்டோ. (௬௧)

வையமுழு துண்ட திருவாய்மலர்திறந்திட்
டுய்யவடியேன்முனுரை செய்தவுரையாலே
யையமுமகன்றதென யர்ப்புமறவிட்டேன்
செய்வதினியுன்றனருளின் செயல்களன்றே. (௬௨)

வே று.

பிணித்தபிறவிப்பெருந்தளையைப்பெயர்த்தென்பெரும்பேதை
மைநோயைத், தணித்தவரசேயெனக்குத்தான்றகுமேயாகத்தகா
தாகத், துணித்ததிறல்வான்போரினையே தொடங்குகென்றுநீயிங்
கு, பணித்தபணியான்செய்வனெனப்பார்த்தனவனுமுடன்பட்டா
ன். (௬௩)

வே று.

மாதவனுந்தனஞ்சயனுந் தங்களிலேமகிழ்ந்துரைத்த
வோதரியபொருளினைநீ யுணர்ந்தவாறெங்ஙனெனில்
வேதவியாதனனுடைய மெய்யருளைமிகவுடையே
னாதலினாலறிந்தனன்வே றறியலாம்வகையுண்டோ. (௬௪)

அப்பொருளை நினைதோறு மற்புதமாயக * மகிழ்வு
மெப்பொழுதும்வருமவன்று னிருக்கின்றவகைவிரித்த
வொப்பரியதிருக்கோல முணர்தோறுமுணர்தோறுஞ்
செப்பரியபெருங்களிப்பென் சிந்தையுளேதிகழுமால். (௬௫)

எஞ்சலிலாப்பொருளனைத்து மிப்படியேபுகுந்ததெனச்
சஞ்சயனன்றெடுத்துரைத்து நூற்றுவர்க்குத்தாதையோய்
வஞ்சனையேகண்ணாக வாழ்கின்றமற்றவர்க்குப்
பஞ்சவரோவலியவரொன் றிவ்வண்ணம்பகர்வுற்றான். (௬௬)

வே று.

திருவறநீதி செயம்புகழெல்லா
மருவருமாயைசெய் மாதவன்வாய்மை
தருமம்விடாத தனஞ்சயனென்னு
மிருவருநின்ற விடத்தனவென்றான். (௬௭)

என்றபெருட்டிற மிப்படியேயாய்க்
குன்றமெடுத்தருள் கொண்டல்பணிப்பான்
வென்றபுலத்து வியாதன்விரிப்பா
னின்றவருக்கிது நேர்படவற்றே. (௬௮)

---

* மகிழ்வும்-என்ற உம்மை எதிரது தழீய எச்சவும்மை.



வே று.

வேதநூல்களின்முடிவினை வியாதனிற்பின்னு
ளோதமாக்கடலுலகி லுண்டாக்கியவுரவோன்
கோதிலாநெறியுணர்ந்த கோவிந்தமாமுனிவன்
பாததாமரைபற்றி வீட்டின்பமேபடைத்தான். (௬௯)

வே று.

ஆற்றியல்வழுவிய புலன்களைந்தையும்
பாற்றியசங்கர பகவற்பாதனென்
றேற்றியபெயரினா னருளினாலியான்
சாற்றினனிப்பெருந் தருமநூலையே. (௭௦)

பதினெட்டாவது

சஞ்சேபவத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௫௫௨.

---

பகவற்கீதை முற்றுப்பெற்றது.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

சர்வஞ்சின்மயம்.

---

உ

கணபதி துணை.

# பாட்டு முதற்குறிப்பகராதி.


| பாட்டு. | பக்கம். |
|---|---|
| அங்கியொளிபக | ௩௬ |
| அங்குமால்கொ | ௪௪ |
| அசைவிலாமறை | ௬௨ |
| அஞ்சுதலின்மை | ௬௩ |
| அஞ்சுபுலனவை | ௧௬ |
| அஞ்சுபுலன்வழி | ௩௫ |
| அஞ்சுபொறித்தி | ௨௪ |
| அஞ்சுமெய்நடுங் | ௪௫ |
| அடங்கியபொறி | ௬௭ |
| அடங்குகின்றபு | ௨௦ |
| அடுத்தலைம்புல | ௧௩ |
| அடையஞாலத் | ௩௪ |
| அணித்தகைய | ௭௭ |
| அதனால்வருபய | ௨௧ |
| அத்திஞானம் | ௫௧ |
| அந்தக்கரணங் | ௩௪ |
| அந்தவுருவான | ௭௫ |
| அப்பொருளை | ௭௮ |
| அரசவ்வரசால் | ௫ |
| அரிதெனுமறி | ௧௧ |
| அரியயனேடர | ௧ |
| அரியவெனது | ௪௦ |
| அருங்குணமாய | ௫௮ |
| அருவமாயதிதா | ௫௪ |
| அலையிலேகடல் | ௧௪ |
| அல்லாவினைதா | ௭௫ |
| அவ்வகையமாய | ௪௫ |
| அழியாதவை | ௯ |
| அழிவொன்றில | ௩௭ |
| அளித்தவவன் | ௩௨ |
| அறியாதபருவத் | ௪௯ |
| அறியாமையிலே | ௨௨ |
| அறிவதாகியவங் | ௨௦ |
| அறிவினாலறிகி | ௨௪ |
| அறிவினாலென் | ௩௮ |
| அறிவினிற்றன்னா | ௧௨ |
| அறிவினையறிகிற் | ௧௨ |
| அறிவுமறியப்படு | ௭௨ |
| அறையும்பொரு | ௩௬ |
| அனையவியோக | ௨௯ |
| அன்பவினையாகு | ௨௩ |
| அன்றியும்மூனை | ௧௧ |
| அன்றியேயும் | ௩ |
| அன்னவகையாலு | ௮ |
| அன்னவர்கள்சோ | ௭ |
| ஆசினையடைந்த | ௬௭ |
| ஆதலாலறிவாய | ௭ |
| ஆதலாற்புலன்க | ௧௩ |
| ஆதலானீயும்பல | ௧௬ |
| ஆதலிலடாத | ௬௬ |
| ஆதிதேவனாவா | ௪௮ |
| ஆதியந்தமிலத | ௫௩ |
| ஆதியிலுலகினை | ௧௪ |
| ஆமைதன்னுறுப் | ௧௨ |
| ஆயபிரமத்தோ | ௩௪ |
| ஆயாதவர்க்கும | ௬ |
| ஆயிலுலகங்களை | ௩௮ |
| ஆவதானவமர் | ௧௦ |
| ஆவதென்பதுமா | ௧௯ |
| ஆர்த்தனவளைக | ௩ |
| ஆறுசெல்பொரு | ௧௩ |
| ஆற்றியல்வழுவி | ௭௯ |
| ஆற்றுமிவ்வுடம்பி | ௧௭ |
| ஆனபொருளீதா | ௫ |
| ஆனவிப்பொரு | ௫௪ |
| ஆன்றவறிவுடை | ௩௧ |
| ஆன்றவறிவுங் | ௭௨ |
| இகமேநிகழும்பு | ௨௪ |
| இகழ்பவர்நட்டா | ௫௧ |
| இடரானதுதா | ௨௮ |
| இதனால்வினைக | ௧௫ |
| இந்தவண்ணத்தி | ௫௭ |
| இந்தவியற்கையி | ௭௪ |
| இந்தவின்பமா | ௬௨ |
| இந்தவுடலம்விடு | ௩௪ |
| இந்தவுருவென் | ௪௬ |
| இந்தியங்களுக்கு | ௬௧ |
| இப்படியன்றிவே | ௬௭ |
| இப்படியுயிராயு | ௫௫ |
| இப்படியுரைத்த | ௨௧ |
| இப்பரிசினாண் | ௩௫ |
| இப்பரிசினால்வ | ௫௯ |
| இப்பரிசுபயில் | ௨௭ |
| இப்பரிசுரைத்த | ௫௦ |
| இப்பரிசென்னை | ௪௦ |
| இப்பொருளடை | ௬௪ |
| இரவிதானொரு | ௫௬ |
| இருப்பிடமாமூட | ௭௧ |
| இருமையுமறிவ | ௫௫ |
| இரும்புவனம | ௪௩ |
| இருவகைத்தாய் | ௬௩ |
| இருவகையவினை | ௩௦ |
| இருவகையுயிர்க் | ௫௧ |
| இருவேறுவகை | ௭௭ |
| இல்லாமையினிய | ௯ |
| இவையிரண்டை | ௬௨ |
| இவ்வகைமொழி | ௪௭ |
| இவ்வகையகுண | ௩௧ |
| இவ்வகையதாகி | ௮ |
| இவ்வகையவாய | ௨௪ |
| இவ்வகையாசுர | ௬௫ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| இவ்வகையேவ | ௭௨ |
| இவ்வகைவிசய | ௨௮ |
| இவ்வகைவினையி | ௧௨ |
| இவ்வண்ணமறி | ௬ |
| இவ்வாறிதினியல் | ௬௦ |
| இவ்வுயிரிவ்வுட | ௫௪ |
| இழியாதிந்த | ௨௮ |
| இறந்தவென்விபூ | ௪௧ |
| இறந்தாரோவென | ௪௭ |
| இறந்துபோமள | ௬௪ |
| இறவாவகைதன் | ௨௬ |
| இற்றிவையனை | ௫௩ |
| இனம்வலியின் | ௬௪ |
| இன்றுவாளமர் | ௧௦ |
| இன்னதன்மை | ௫௬ |
| இன்னவர்களியா | ௨௧ |
| இன்னவர்தங்க | ௩௨ |
| இன்னுதனவுமி | ௭௧ |
| ஈண்டுபொருளி | ௩௭ |
| ஈர்வன்றுயர்க | ௩௬ |
| ஈனமற்றதுறவற | ௭௩ |
| உஞ்சேபோகு | ௭ |
| உடம்புடனிருந் | ௫௮ |
| உடம்புடனே | ௨௪ |
| உடம்பெனவுரை | ௫௨ |
| உடனுயபுலனு | ௨௩ |
| உணர்வவிகாரி | ௫௫ |
| உண்டாயவுல | ௪௯ |
| உண்டுமீளவொ | ௬௬ |
| உண்ணல்வினை | ௪௯ |
| உண்பனயாகமா | ௬௭ |
| உண்பனயாவை | ௫௫ |
| உந்தியப்பொறி | ௨௦ |
| உய்யவன்பினு | ௩௦ |
| உய்யும்பரிசினுண | ௧௯ |
| உய்வகையோக | ௨௫ |
| உருப்பான்மைமற் | ௯ |
| உரைசெயற்கரி | ௫௦ |
| உரைசெய்சத்து | ௫௭ |
| உலகமுந்தானு | ௫௧ |
| உழுதொழில்பசு | ௭௪ |
| உளவாமுயிருண | ௧௫ |
| உன்னியவான | ௫௬ |
| உன்னுநான்மறை | ௨ |
| ஊணையேமுத | ௩௯ |
| ஊர்வனநிற்ப | ௩௭ |
| ஊழாலேவருமி | ௩௨ |
| ஊழால்வருமுல | ௬௦ |
| ஊறுபடவொன் | ௯ |
| ஊனப்படுமிவ் | ௭௨ |
| எஞ்சலிலாப்பொ | ௭௮ |
| எஞ்சுதலையில | ௩௪ |
| எண்டிகழுமி | ௨௭ |
| எண்ணியவுலக | ௬௪ |
| எண்ணினியற் | ௪௪ |
| எண்ணுமின்றி | ௨௦ |
| எப்பொருடனக் | ௩௯ |
| எப்பொருளினும் | ௫௨ |
| எப்பொருளுமி | ௩௬ |
| எய்தவெங்கள் | ௩ |
| எரிநிகர்வெகுளி | ௧௩ |
| எல்லாத்தவமுமி | ௩௦ |
| எல்லாப்பொ-தனி | ௪௧ |
| எல்லாப்பொ-றி | ௩௫ |
| எல்லாப்பொ-பர | ௭௭ |
| எல்லாப்பொ-பழை | ௯ |
| எல்லார்க்குங்க | ௩௮ |
| எல்லாவுயிரு | ௨௮ |
| எவமறமுன்பி | ௧௮ |
| எவ்வகைப்பயனு | ௧௭ |
| எள்ளலானதிகந் | ௫௪ |
| எறியாவெரிவரு | ௨௧ |
| எறிவரும்பிணி | ௩௩ |
| என்னத்துவிதத்த | ௪௦ |
| என்செயறவிரிவி | ௧௬ |
| என்பாற்பொரு | ௧௬ |
| என்பேரிடும்பை | ௪௯ |
| என்றபொருட் | ௭௮ |
| என்றருளிச்செய் | ௪௪ |
| என்றவனுரைத் | ௪௯ |
| என்றவன்வண | ௪௭ |
| என்றுகூறவிச | ௨௮ |
| என்றுமுளதாய | ௪௬ |
| என்னசெய்வதெ | ௭௦ |
| என்னதுமொழி | ௭௭ |
| என்னுடைய | ௪௯ |
| என்னுருவிற்பு | ௩௭ |
| என்னைப்பற்றி | ௭௬ |
| என்னையேநினை | ௭௬ |
| ஏகமேகருதுவா | ௭௦ |
| ஏதமானதின்றி | ௩௬ |
| ஏயநானெதிரோ | ௫௦ |
| ஏயவிருவோம் | ௭௭ |
| ஏயும்பரிசிவ்வுல | ௪௮ |
| ஏய்வகையதா | ௪௫ |
| ஏறுமல்லுவெ | ௪௮ |
| ஏன்றுமுன்னங் | ௫௭ |
| ஐவகைப்பொரு | ௧ |
| ஒக்கும்வகையா | ௨௬ |
| ஒத்துநல்லறிவு | ௫௮ |
| ஒத்தெங்குமாய | ௫௫ |
| ஒப்பரிதாய | ௬௯ |
| ஒருபதமடித்தொ | ௧ |
| ஒருபெரும்பொ | ௫௩ |
| ஒருவருமொரு | ௧௪ |
| ஒருவனசிக்க | ௬௫ |
| ஒருவனென்றுங் | ௧௦ |
| ஒவ்வாதீதொழி | ௬ |
| ஒழியாதென்று | ௫௯ |
| ஒளியினுலக | ௪௭ |
| ஒன்றலாதுபல | ௪ |
| ஒன்றியமன | ௭௬ |
| ஒன்றினுமாசை | ௫௧ |



| பாட்டு. | பக்கம். |
|---|---|
| ஓங்கியவுலகி | ௭௧ |
| ஓடுகின்றபுனலா | ௧௯ |
| ஓதலாகாநிமித் | ௫ |
| ஓதருஞானியெ | ௩௨ |
| ஓதருநதிகளெல் | ௪௭ |
| ஓதலினியற்கை | ௩௫ |
| ஓதியவுடம்பிற் | ௫௪ |
| ஓதிற்பெருகும்பூ | ௪௧ |
| ஓதுமாசையிதிற் | ௫௭ |
| ஓமென்கின்ற | ௬௯ |
| ஓமென்றுரைத் | ௬௯ |
| ஓரின்மேலாகி | ௫௬ |
| கங்கையாள்பெ | ௩ |
| கண்களும்வயிறு | ௪௫ |
| கண்டவரில்லீ | ௫௦ |
| கண்ணனுநானி | ௪௩ |
| கண்ணியவுலகி | ௫௯ |
| கண்ணிற்கருதரு | ௧௫ |
| கண்ணினுற்றெரி | ௩௧ |
| கண்ணேயெனவ | ௬௦ |
| கண்ணையோரிட | ௬௩ |
| கதுவியபொருண் | ௧௧ |
| கருதரும்வகைநி | ௧௮ |
| கருநாண்முதல் | ௬௦ |
| கருமநன்றென | ௨௨ |
| கல்லாருந்தோ | ௪௩ |
| கவைதருங்குண | ௨௩ |
| கறைசெயைம்பு | ௭௪ |
| கனவுந்திகழ் | ௬௦ |
| கனையெரிபுகை | ௭௫ |
| காடுமலையுமலை | ௭௫ |
| காணுங்கேட்கு | ௨௩ |
| காணும்புலன்க | ௫௪ |
| காதலாலிந்த | ௬௯ |
| காதலாற்றவிக் | ௧௭ |
| காதலிவிவ்வெட் | ௫௩ |
| காதலினுகியகா | ௬௫ |
| காமமென்றிடும் | ௭௦ |
| காரணமிறந் | ௫௦ |
| காலத்தாலும் | ௩௮ |
| காவல்செய்ததை | ௨௪ |
| குடந்தொறுந் | ௬௧ |
| குலங்கெடவே | ௫ |
| குளமுதலியவற் | ௧௧ |
| குறியுநீலமயக் | ௫௭ |
| குறையுமாப்பி | ௧௩ |
| கூறினநூல்வழி | ௬௫ |
| கெடுகின்றபூத | ௫௫ |
| கைம்மாறில்லா | ௨௬ |
| கையும்பதமூந்தி | ௪௭ |
| கொண்டுசெயத்த | ௬௯ |
| கொண்டுபயிலு | ௨௯ |
| கொலைபெரும் | ௭௩ |
| கொல்லினுமென | ௬ |
| கொற்றவர்தங் | ௫ |
| சத்துவகுணத் | ௬௭ |
| சத்துவமாந்தர் | ௫௮ |
| சத்துவமிராசத | ௫௭ |
| சந்திரனுஞ் | ௪௧ |
| சந்நியாசமாவது | ௭௦ |
| சாதிபுரியுந்தொ | ௨௫ |
| சாத்துவிதர்தே | ௬௬ |
| சாயைபோலும் | ௪௮ |
| சாயையன்னவெ | ௫௯ |
| சாவதிலையாவ | ௭ |
| சாவாதுபிறவா | ௧௯ |
| சித்தர்களிற்கபி | ௪௨ |
| சிந்தையினித்தெ | ௩௩ |
| சிறந்தவரசர் | ௨௯ |
| சீதமழன்முத | ௮ |
| சுருளார்கின்றது | ௪௪ |
| செயத்தகுவதுவு | ௫௨ |
| செயத்தகுவன | ௬௭ |
| செயலாலுங்குண | ௧௯ |
| செயல்வகையா | ௧௫ |
| செயன்மேனின் | ௧௯ |
| செய்தவினைப்ப | ௨௫ |
| செய்தியின்றியத் | ௧௦ |
| செய்யமாமலர் | ௫௬ |
| செய்யாமுன்சா | ௩௫ |
| செல்வம்விரும்பி | ௩௨ |
| செறிந்ததிவ்வா | ௧௦ |
| செறியுமிப்பொ | ௫௫ |
| சேயமாமதுரை | ௯ |
| சொல்லருஞான | ௨௨ |
| சொல்லார்விசய | ௧௯ |
| சொன்னகாரண | ௭௫ |
| சொன்னவிவை | ௭௫ |
| ஞானகாரணங் | ௭௦ |
| ஞானமாமிது | ௧௮ |
| ஞானமுதலிந்தி | ௪௭ |
| ஞானமாயொன் | ௩௮ |
| தக்கசத்துவமே | ௫௮ |
| தக்கதுதகாதெ | ௫௮ |
| தஞ்சமிவ்வுலகு | ௪௬ |
| தடுத்ததொழி | ௧௭ |
| தடுமாற்றமக்கு | ௫ |
| தருபயனதவிட் | ௧௨ |
| தருமம்பாவந்த | ௭௩ |
| தருமனடல்வீம | ௪ |
| தலைநின்றபொரு | ௧௨ |
| தலைமையந்த | ௬௮ |
| தலைமையுங்கொ | ௭௪ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| தலையாமிந்த | உ௬ |
| தலையுங்கழுத் | உ௬ |
| தவர்கொள்படை | எ |
| தாங்கியநீரை | ௩அ |
| தாவிலருந்தந்தை | ௬ |
| தானந்தமிலி | ௩௩ |
| தானலதியாவ | உ௬ |
| திதனுயெவரு | ௧௦ |
| தியாகமூன்றுவ | எ௦ |
| திரியுமிருகதிரி | ௩௧ |
| திருவறநிதி | எஅ |
| தின்பநக்குவ | ௬உ |
| தீக்குலாம்வேலி | ௬எ |
| தீங்கியற்றுகின்ற | ௪௦ |
| தீதகலாதென | எ௬ |
| தீதறுசிறுவர் | ௬ |
| தீதற்பாலாம் | உஉ |
| தீத்தவழும்வடி | ௬அ |
| தீமனந்தனிலே | ௧எ |
| தீமைசெய்ய | ௬௪ |
| தீராவகைதன் | எ௫ |
| தீர்த்தயார்க்கு | ௬அ |
| துயிலுமுணவு | உஎ |
| துறவுநன்றரு | உஉ |
| துற்றவின்பமு | ௧௧ |
| துன்பமாய்விட | எ௪ |
| துன்னியவாசை | ௬௧ |
| தெய்வவாசர | ௬௩ |
| தெரியாவகை | ௪௪ |
| தெளிபவருணர் | ௧௧ |
| தெளிவினெஞ் | ௬அ |
| தேடியபொருள் | உ௦ |
| தேடும்பழையவ | ௩௩ |
| தேவதேவநின் | ௪அ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| தேவரும்வண | ௪௫ |
| தேவராயடைந் | ௩௧ |
| தேவர்களுமுனி | ௪௦ |
| தேவர்களைமகி | ௧௫ |
| தேறுநெஞ்சின | உஅ |
| தொடக்கறவி | ௬௫ |
| தொடருறக்கமய | எ௪ |
| தொழும்புகழு | ௪௫ |
| தொன்மையாக | உ௧ |
| நண்ணியகுணத் | ௫௪ |
| நல்லகருமயோ | ௩௪ |
| நல்லகாதல்செ | ௧அ |
| நல்லமாந்தர்ந | ௬உ |
| நல்லவாறறி | ௫௬ |
| நவைதருகுணமு | ௧௧ |
| நற்றவநிகழ்தரு | ௧அ |
| நன்ருய்ஞான | எஉ |
| நன்நேஞானவ | உ௪ |
| நன்றேவினையின் | ௧௪ |
| நித்தமாயவினை | எ௧ |
| நிரந்தரமிப்பரி | ௪௦ |
| நிலத்திறெடுவா | ௪௬ |
| நில்லாவுடற்கே | ௬ |
| நிறைவிலாக்காம | ௬௪ |
| நீடுமனநிலைநி | ௩௦ |
| நீதிவேதம்வானு | ௪அ |
| நீரினுநிறைந்து | ௧௩ |
| நூற்படுநெறியு | ௬எ |
| நூற்றவர்தாமு | ௪௬ |
| நெய்மார்பிற் | எ |
| நெருப்பைமுற்றி | ௧எ |
| நெறியில்வருவி | ௬௦ |
| நெறியால்வருவி | ௩௬ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| படைகளில்வச்சி | ௪௫ |
| பண்டுகண்டறி | ௪௧ |
| பண்டுநின்றபழ | ௧௬ |
| பண்ணிக்காமந் | எ௪ |
| பரிந்தினியுறைப் | ௪௪ |
| பருகாநின்றேற் | ௪௧ |
| பலவினியுறாத் | ௪௩ |
| பற்றுமாங்கார | எ௩ |
| பற்றுமாசின்மை | ௫எ |
| பாடும்பனுவல் | உ௬ |
| பாதியோர்பெண் | ௧ |
| பாவமாகத்தரும | எ௩ |
| பிணித்தபிறவி | எஅ |
| பிரமமானேர்பிர | உ௦ |
| பின்னையோவிவ் | ௧௪ |
| பீறியபோர்வை | ௬ |
| புண்ணியபூமியெ | உ |
| புண்ணியவுலகத் | ௧௧ |
| புத்திபொறைத | ௪௦ |
| புனவைபொறி | ௧௫ |
| புன்மையவாய | உ௫ |
| பூக்கமழ்நாற்றந் | ௬௧ |
| பூதமைந்தினகத் | ௫௩ |
| பூத்தருளியொரு | உஉ |
| பெண்களிற்புகழ் | ௪உ |
| பெரியவர்பயின்ற | ௧௬ |
| பெருமுனியிற் | ௪உ |
| பெருமையொன் | உ௩ |
| பெற்றதேகொட | உ௦ |
| பெற்றநன்மனை | ௫௩ |
| பேதமுடைய | ௪௧ |
| பேதைமையை | ௬அ |
| பேதைமையடை | ௧உ |





| பாட்டு. | பக்கம். |
|---|---|
| பையரவிலேயினி | எஎ |
| பொய்மையடை | உ௧ |
| பொராவருங் | ௪உ |
| பொருத்தமாய் | எ௪ |
| பொறிகளுண்ணி | எ௬ |
| பொன்றுவதுடம் | அ |
| போகமாயபுலன் | உஎ |
| போதலரிலேயே | ௩௧ |
| போர்முகமாகிநி | உ |
| போவனநிற்பவ | ௫௫ |
| போனவையினி | ௩௩ |
| மண்ணுளும்பெரு | எ |
| மண்ணியைவிகா | அ |
| மண்ணுநீருமெரி | ௩௦ |
| மண்ணுறவணங் | ௪௫ |
| மந்திரமாயவிங் | ௬௧ |
| மருத்துவர்குரிய | ௪௪ |
| மருவற்குரியவ | ௩௫ |
| மருவுகின்றதிவ் | ௬உ |
| மருவுற்றபிரகி | ௩௩ |
| மலைகளின்மாமே | ௪உ |
| மறந்திருந்தமன | ௬௩ |
| மறைபயிறலுந்த | ௬௩ |
| மற்றவருந்தம்ம | ௩உ |
| மற்றவர்தந்தது | ௧௫ |
| மற்றவர்தம்மை | ௬௫ |
| மற்றவர்நெஞ்சி | ௪௧ |
| மற்றிப்படிநிக | ௬௦ |
| மற்றிவ்வுடறன் | ௫உ |
| மற்றுனக்குச் | எஎ |
| மனஞ்செயுந | எ௩ |
| மனமொருக்கனு | எ௩ |
| மன்னநீகாண | ௫௦ |
| மன்னனருள்விச | உ |
| மன்னவவென் | எஎ |
| மன்னவுடலியா | ௫உ |
| மன்னியகளிப் | ௬௫ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| மாதவனுந்தன | எஅ |
| மாயனிலைவதின் | ௧எ |
| மாயுமவராலு | அ |
| மாயுமாயைம | ௩௦ |
| மானமவமான | ௫௧ |
| மானமும்பிறர்த | ௫௩ |
| மாற்றலர்களெ | ௬ |
| மிகமேனின்றமி | உ௧ |
| மிக்கசொற்ரு | ௬௩ |
| மின்னேயனே-செ | ௬ |
| மின்னேயனே-வு | ௬௧ |
| மின்னேயே-திரு | எ |
| மின்னேயே-வாழ் | ௩௧ |
| மின்னேயேப்வே | உ௧ |
| மூந்துவானிற்சு | ௬௧ |
| முன்செய்காரிய | ௬அ |
| முன்நிகழ்பிறப் | ௫௩ |
| முன்னேயொன் | ௩எ |
| மூதவாவென்கு | ௫எ |
| மூன்றுகுணவ | ௩௧ |
| மெய்யறியேவி | உ௪ |
| மெய்யுறவுன்னே | ௫௧ |
| மெய்வகைதனக் | ௧௬ |
| மெய்வகையிதி | ௧௧ |
| மெய்வகையவுல | ௪௧ |
| மெய்வருத்தமு | எ௧ |
| மேலாயுள்ளவிப் | ௧அ |
| மேல்வகுத்திவர் | ௩ |
| மேவினயாவை | உ௫ |
| மைக்குணங்க | ௩௧ |
| மையலிதுவென் | உ௧ |
| மொழிசெய்கின் | ௬உ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| யாக்கையோடுமி | எ௧ |
| யாதவாவென் | ௪அ |
| யாதின்மாட்டினு | எ௧ |
| யாதொருபொரு | ௧௩ |
| யாதொன்றிந்தப் | உஎ |
| யாதொன்றைம | ௩௫ |
| யாருமறியப்ப | ௩எ |
| யாரும்வினைகள | உ௩ |
| யாவர்களாசைப் | ௬௬ |
| யாவர்கள்சிலவ | ௫௧ |
| யாவர்போர்தரு | ௫௪ |
| யாவனெருத்த | ௩உ |
| யாவனெருவ | உஅ |
| யாவனெருவன் | எஉ |
| யானும்வகையது | ௬ |
| யானெனதென்ப | ௧௪ |
| யோகமனத்தவ | உ௫ |
| யோகமுடியாதி | உ௧ |
| யோகமேவவி | உ௧ |
| வசையிறவமு | ௬அ |
| வஞ்சர்செய்தவி | ௩ |
| வஞ்சர்வேல் | உஎ |
| வணங்கவிமை | ௪௬ |
| வணிகருமற்ற | ௩௧ |
| வருணனுமியம | ௪உ |
| வலந்தருதிறத் | ௪௬ |
| வாக்கினலாதன் | எ௧ |
| வாங்கியைம் | உஎ |
| வாயாததொரு | ௬௧ |
| வாயேயன்நிமு | ௪ |
| வாய்மையவல் | ௫௧ |
| வாராநின்றரு | ௫ |
| வாழுஞ்சத்துவ | ௫அ |
| வானடையவிம் | ௪௬ |
| விடம்படுபணு | ௫உ |
| விடலரும்வகை | ௧உ |
| விட்டுமுற்றும்வி | உ௦ |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| விண்ணியன்மொ | ௨ |
| வியக்கமேன்மு | ௫௫ |
| வியந்துதங்களை | ௬௫ |
| விரியவுணர்ந்த | ௫௨ |
| விரியவுரைசெய் | ௫௪ |
| விரும்பலராகி | ௬௪ |
| விரைசெய்தார் | ௭௬ |
| விலங்கலனையா | ௫௭ |
| விழியாமெனவ | ௨௧ |
| விளம்புமவ்வளவி | ௪ |
| வினைப்பயன்ற | ௭௫ |
| வினைமுயன்றிட | ௨௫ |
| — | |
| வீதலும்பற்று | ௭௨ |
| வீமனையும்விசய | ௨ |
| வீவரெனக்கொ | ௧௦ |
| — | |
| வெய்யநெஞ்சம | ௨௮ |
| வெல்லப்பட்ட | ௭௫ |
| — | |
| வேண்டல்வே | ௧௫ |
| வேதநாலுநின் | ௬௨ |
| வேதநூல்களின் | ௭௯ |
| வேதநெறியாலை | ௪௯ |
| வேதமாகிநிகழ் | ௫௧ |
| வேதமேமுதனூ | ௬௬ |
| வேதமொழி | ௫௮ |
| வேர்மேலதுத | ௬௦ |
| வேறப்பாவொரு | ௭௬ |
| — | |
| வையமனைத்தை | ௫ |
| வையமுழுதுண் | ௭௮ |
| வையாரயிலுழ | ௮ |

பாட்டுமுதற்குறிப்பகராதி

முற்றிற்று.